அகில பாரத சங்கர ஸேவா ஸமிதி வெளியீடு

॥ श्रीः ॥



"एषा शंकरभारती विजयते निर्वाणसौख्यप्रदा"

ஏஷா ஶங்கரபா⁴ரதீ விஜயதே நிர்வாணஸௌக்²யப்ரதா³

# श्रीजगद्गुरुग्रन्थमाला

ஸ்ரீ ஜக³த்³கு³ரு க்³ரந்த²மாலா

# ॥ जीवन्मुक्तानन्दलहरी ॥

# ஜீவன்முக்த ஆனந்த³லஹரீ

ஸ்ரீ வாணீவிலாஸ் பிரஸ்
ஸ்ரீரங்கம்.
1963



॥ श्रीगुरुभ्यो नमः ॥

## ॥ समर्पणम् ॥

श्रीमच्छंकरदेशिकस्य महिता मूर्तिद्वयी या स्थिता
तत्रैका हि तिरोबभूव विजने केदारनाथस्थले ।
अन्या वर्णमयी तु भाष्यनिचयस्तोत्रप्रबन्धात्मना
सर्वत्रैव समुज्वला विजयते ताभ्यां तनुभ्यां नमः ॥ १ ॥

यस्तत्रास्ति लघुप्रबन्धनिचयः स्तोत्राणि भूयांसि वा
तेषां द्राविडभाषयाऽनुवदनं विद्वद्वरैः कारितम् ।
श्रीमच्छंकरसेविनी सुसमितिः सम्यक्प्रकाश्याधुना
विद्यातीर्थपदे समर्पयति तत् लोकोपकारक्षमम् ॥ २ ॥

शंकरगुरुसंस्थापितसर्वजगद्वन्द्यशारदापीठम् ।
शंकरसेवासमितिः प्रकरणमालार्पणादलंकुरुते ॥ ३ ॥

शंकरगुरुवररचितप्रकरणमालां शुभानुवादयुताम् ।
शंकरपरंपरागतविद्यातीर्थे समार्पिपत्समितिः ॥ ४ ॥

शंकरसेवारसिकाः शांकरसिद्धान्तसारसर्वस्वम् ।
शंकरसेवासमितिप्रकटनमालां सदाऽपि सेवन्ताम् ॥ ५ ॥

## பதிப்புரை.

ஸ்ரீ சிருங்ககிரி ஸ்ரீ ஜகத்குரு மஹா ஸந்நிதானம் அவர்களின் பரமானுக்ரஹத்தால் பிரசுரிக்கப்பட்டுவருகின்ற ஸ்ரீ ஜகத்குரு கிரந்தமாலையில் ஸ்ரீ சங்கரபகவத்பாதாசார்யார் அருளிய கிரந்தங்களில் **ஜீவன்முக்த ஆனந்த³லஹரீ**, என்ற பிரகரணத்துக்கு வழக்கம் போல பதவுரை பொழிப்புரை, விரிவுரைகளுடன் வெளிவந்துள்ளன.

**ஜீவன்முக்த ஆனந்த³லஹரீ**: ஜீவன்முக்தர்கள் வ்யுத்தான தசையில் ப்ரஹ்மானுபவ நிலையிலிருந்து வெளி வந்து உலகத்தாரோடு பழகி நம்மைப்போலவே சரீராதிகளால் எந்தவிதமான காரியத்தைச் செய்துகொண்டிருந்த போதிலும் அவர்களுடைய ஆத்மாநந்தானுபவ நிலைக்குச் சிறிதும் பாதகம் ஏற்படாது என்பதைக் கூறி அவரே த்யாகி, அவரே யோகி என்று உபஸம்ஹாரம் செய்கிறார் ஸ்ரீ பகவத்பாதாள்.

இந்நூல் தமிழில் பதவுரை, பொழிப்புரைகளுடன் விசேஷ ஸ்வாரஸ்யங்களுடன் கூடிய கருத்துரையும் எழுதித்தந்து உதவிய **ப்ரஹ்மஸ்ரீ R. கிருஷ்ணஸ்வாமி அய்யர்** அவர்களுக்கு நம் ஸமிதியின் சார்பில் நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

இம்மலர் ஸ்ரீ ஸத்குரு சரணாரவிந்தங்களில் சிரத்தையுடனும் பக்தியுடனும் ஸமர்ப்பணம் செய்யப்படுகிறது.

**K.V. சுப்பரத்னம் அய்யர்**,
பொதுக்கார்யதர்சி.
அகில பாரத சங்கர ஸேவா ஸமிதி

॥ श्रीः ॥

॥ ஶ்ரீ: ॥

# ॥ जीवन्मुक्तानन्दलहरी ॥

# ஜீவன்முக்த ஆனந்த³லஹரீ

**ஶ்ரீ சங்கரபகவத்பாதாசார்யர் அருளியது.**

[வேத விஹிதமான கர்மாக்களை நிஷ்காமமாக அனுஷ்டித்துவந்து, அதனால் சித்தத்திலுள்ள தோஷங்கள் நிவர்த்தியாகி, விவேக வைராக்கியாதி ஸாதன நிஷ்டராக இருந்து, இந்த ஸம்ஸார பந்தத்திலிருந்து விடுதலை அடைய வேண்டும் என்ற தீவிரமான எண்ணத்துடன் ஸன்யாஸம் பெற்று, ஸத்குருநாதரை அடைந்து, அவருடைய பிரீதியை ஸம்பாதித்து, அவரால் கருணையுடன் உபதேசிக்கப்பட்ட ஆத்ம தத்வத்தை நன்கு சிரவணம், மனனம், நிதித்யாஸனம், ஸமாதி என்கிற முறையில் கிரமப்படி அப்யஸித்து, ஆத்ம ஸாக்ஷாத்காரமடைந்தவர் எல்லாவித கர்ம பந்தத்திலிருந்தும் விலகினவராகவே இருந்தபோதிலும், பிராரப்த கர்ம வசத்தினால் அவர் சரீரத்தோடு இருப்பவராக உலகத்திலுள்ள மற்றவர்களுக்குத் தோன்றிக்கொண்டிருக்கும் ஸமயத்தில், அவர் என்ன செய்துகொண்டிருப்பார் என்பதை இச்சிறு கிரந்தத்தில் ஸ்ரீமத் சங்கரபகவத்பாதாசார்யாரவர்கள் வர்ணிக்கிறார்கள். இரண்டற்ற நிலை ஏற்பட்ட அந்த ஞானிக்கும் ஸமாதி நிலையிலிருந்து எழுந்திருக்கும் ஸமயங்களில் இந்த பிரபஞ்சம் திருஷ்டிக்கு விஷயமாகத்தான் இருக்கும், ஆனாலும் இது வெறும் தோற்றமே தவிர வாஸ்தவமில்லை என்ற எண்ணமும் இருந்துகொண்டேயிருக்கும்; ஆகையினால் அவர் இந்த பிரபஞ்சத்திலுள்ள வைசித்திரியத்தினால் ஏமாந்து போகமாட்டார். அவருக்கும் உலகத் தோற்றமிருப்பதை வைத்து அவரும் நம்மைப்போலவே அக்ஞானி என்று நாம் தீர்மானித்து விடக்கூடாது. ஸாமான்ய ஜனங்கள் எப்படி நினைத்தாலும் அறிவாளிகள் ஞானியென்றே அறிவார்கள் என்று ஸ்ரீமத் ஆசார்யார் எடுத்துக்காட்டுகிறார்.]

**पुरे पौरान्पश्यन्नरयुवतिनामाकृतिमयान्**
**सुवेषान्स्वर्णालङ्करणकलितांश्चित्रसदृशान् ।**
**स्वयं साक्षाद्दृष्टेत्यपि च कलयंस्तैः सह रमन्**
**मुनिर्न व्यामोहं भजति गुरुदीक्षाक्षततमाः ॥ १ ॥**

**புரே பௌரான்பஶ்யன்னரயுவதிநாமாக்ருதிமயான்**
**ஸுவேஷான்ஸ்வர்ணாலங்கரணகலிதாம்ஶ்சித்ரஸத்³ருஶான் ।**
**ஸ்வயம் ஸாக்ஷாத்³த்³ருஷ்டேத்யபி ச கலயம்ஸ்தை: ஸஹ ரமன்**
**முநிர்ன வ்யாமோஹம் ப⁴ஜதி கு³ருதீ³க்ஷாக்ஷததமா: ॥ 1 ॥**

| | | |
|---|---|---|
| **पुरे**<br>**புரே** | = | நகரத்தில், |
| **सुवेषान्**<br>**ஸுவேஷான்** | = | நல்ல உடை உடுத்தினவர்களாக, |
| **स्वर्णालङ्करणकलितान्**<br>**ஸ்வர்ணாலங்கரணகலிதான்** | = | தங்க ஆபரணங்களை தரித்தவர்களாக, |
| **नरयुवतिनामाकृतिमयान्**<br>**நரயுவதிநாமாக்ருதிமயான்** | = | ஸ்திரீ புருஷர்களென்ற பெயரையும் உருவத்தையும் உடையவர்களாக, |
| **पौरान्**<br>**பௌரான்** | = | நகரத்து ஜனங்களை, |
| **चित्रसदृशान्**<br>**சித்ரஸத்³ருஶான்** | = | சித்திரத்தில் காணும் பொம்மைகளை போலவே, |
| **पश्यन्**<br>**பஶ்யன்** | = | பார்த்துக்கொண்டும், |
| **स्वयं**<br>**ஸ்வயம்** | = | தான், |
| **साक्षात् द्रष्टा**<br>**ஸாக்ஷாத் த்³ரஷ்டா** | = | நேரில் பார்த்துக்கொண்டிருக்கிற ஸாக்ஷி மாத்திரமே, |
| **इत्यपि**<br>**இத்யபி** | = | என்றும், |
| **कलयन् च**<br>**கலயன் ச** | = | அதே ஸமயத்தில் உணர்ந்துகொண்டும், |
| **तैः सह**<br>**தை꞉ ஸஹ** | = | அவர்களோடு, |
| **रमन्**<br>**ரமன்** | = | ரமித்துக் கொண்டு இருக்கிற, |
| **मुनिः**<br>**முனி꞉** | = | ஞானியானவர், |
| **गुरुदीक्षाक्षततमाः**<br>**கு³ருதீ³க்ஷாக்ஷததமா꞉** | = | குருநாதரிடமிருந்து அடையப்பெற்ற ஞானதீக்ஷையினால் அக்ஞானம் நீங்கி விட்டவர் (ஆனதால்), |
| **व्यामोहं**<br>**வ்யாமோஹம்** | = | ஏமாறுதலை, |
| **न भजति**<br>**ந ப⁴ஜதி** | = | அடையமாட்டார். |

நகரத்தில் நல்ல உடை உடுத்தினவர்களாக, தங்க ஆபரணங்களை தரித்தவர்களாக ஸ்திரீ புருஷர்களென்ற பெயரையும் உருவத்தையும் உடையவர்களாக

இருக்கும் நகரத்து ஜனங்களை, ஏதோ சித்திரத்தில் காணும் பொம்மைகளைப்போலவே பார்த்துக்கொண்டும், தான் நேரில் பார்த்துக்கொண்டிருக்கிற ஸாக்ஷி மாத்ரமே என்று அதே சமயத்தில் உணர்ந்துகொண்டும், அவர்களோடு ரமித்துக்கொண்டிருக்கிற ஞானியானவர் குருநாதருடைய கருணையால் கிடைத்த ஞானதீக்ஷையினால் அஞ்ஞானம் நீங்கிவிட்டரானதினால் ஏமாறுதலை அடையமாட்டார்.

[படத்தில் ஸ்திரீ புருஷர்கள் எவ்வளவு அழகாகவும் அலங்காரத்துடனும் வரையப்பட்டிருந்தபோதிலும், அப்படத்தைக்கண்டு ரஸிக்கும் யாரும் அதில் காணப் படும் ஸ்திரீ புருஷர்கள் வாஸ்தவமானவர்கள் என்று ஏமாந்து போவது கிடையாது. அப்படியேதான் ஞானியும் பிரபஞ்சத்தைப் பார்த்துக்கொண்டு ஆனந்திக்கும்போது பிரபஞ்சத்தில் உள்ள எல்லா நாம ரூபங்களும் வெறும் தோற்றமே என்றும், தான் அவைகளால் பாதிக்கப்படாத சுத்தமான ஸாக்ஷியான அறிவு ஸ்வரூபம் என்றும், நன்கு உணர்ந்து கொண்டே இருப்பார்.] **(1)**

**वने वृक्षान्पश्यन्दलफलभरान्नम्रसुशिखान्**
**घनच्छायाच्छन्नान्बहुलकलकूजद्द्विजगणान् ।**
**भजन्घस्रोरात्रादवनितलकल्पैकशयनो**
**मुनिर्न व्यामोहं भजति गुरुदीक्षाक्षततमाः ॥ २ ॥**

**வனே வ்ருக்ஷான்பஶ்யந்த³லப²லப⁴ரான்னம்ரஸுஶிகா²ன்**
**க⁴னச்சா²யாச்ச²ன்னான்ப³ஹுலகலகூஜத்³த்³விஜக³ணான் ।**
**ப⁴ஜன்க⁴ஸ்ரோராத்ராத³வனிதலகல்பைகஶயனோ**
**முனிர்ன வ்யாமோஹம் ப⁴ஜதி கு³ருதீ³க்ஷாக்ஷததமா: ॥ 2 ॥**

**वने** = காட்டில்,
**வனே**

**दलफलभरात्** = இலைகள் பழங்கள் இவைகளின் பாரத்தினால்,
**த³லப²லப⁴ராத்**

**नम्रसुशिखान्** = தாழ்ந்திருக்கும் அழகான கொப்புகளோடு கூடியதும்,
**நம்ரஸுஶிகா²ன்**

**घनच्छायाच्छन्नान्** = அடர்த்தியான நிழலால் மறைக்கப்பட்டதும்,
**க⁴னச்சா²யாச்ச²ன்னான்**

**बहुलकलकूजद्द्विजगणान्** = ஏராளமான அழகாக கூவுகிற பக்ஷிக் கூட்டங்களோடு கூடியதுமான,
**ப³ஹுலகலகூஜத்³த்³விஜக³ணான்**

**वृक्षान्** = மரங்களை,
**வ்ருக்ஷான்**

**पश्यन्** = பார்த்துக்கொண்டு,
**பஶ்ய**

**घस्रो** = பகல் வேளையில்,
**க⁴ஸ்ரோ**

**भजन्** = ஸேவித்துக்கொண்டும்,
**ப⁴ஜன்**

**रात्रौ** = இரவு வேளையில்,
**ராத்ரௌ**

**अवनितलकल्पैकशयनो** = பூமியின் தரையையே படுக்கையாக வைத்துக்
**அவனிதலகல்பைகஶயனோ** கொண்டு படுத்துக்கொண்டும், இருக்கிற,

**मुनिः** = ஞானியானவர்,
**முநி:**

**गुरुदीक्षाक्षततमाः** = குருநாதரால் அனுக்ரஹிக்கப்பட்ட ஞான
**கு³ருதீ³க்ஷாக்ஷததமா:** தீக்ஷையினால் அக்ஞானம் நீங்கிவிட்டவர் (ஆனதினால்),

**व्यामोहं** = ஏமாறுதலை,
**வ்யாமோஹம்**

**न भजति** = அடையமாட்டார்.
**ந ப⁴ஜதி**

காட்டில், இலைகள் பழங்கள் இவைகளின் பாரத்தினால் தாழ்ந்திருக்கும் அழகான கொப்புகளோடு கூடியதும், அடர்த்தியான நிழலால் மறைக்கப்பட்டதும் அழகாகக் கூவுகிற ஏராளமான பக்ஷிக் கூட்டங்களோடு கூடியதுமான மரங்களைப் பார்த்துக்கொண்டு பகல் வேளையில் (அம்மரங்களின் அடியை) ஸேவித்துக் கொண்டும், இரவு வேளையில் பூமியின் தரையையே படுக்கையாக வைத்துக் கொண்டு படுத்துக்கொண்டும், இருக்கிற ஞானியானவர் குருநாதரால் அனுக்ரஹிக்க ப்பட்ட ஞானதீக்ஷையினால் அஞ்ஞானம் நீங்கிவிட்டவரானதினால் ஏமாறுதலை அடையமாட்டார்.

[நகரத்தில் ஜனங்களுடன் ரமித்துக்கொண்டிருப்பவரே ஒரு ஸமயம் காட்டில் வஸிக்க நேரிட்டால் அங்குள்ள விருக்ஷங்களையும் சித்திரத்திலுள்ள விருக்ஷங்க ளைப்போலவே ஸாக்ஷியாக இருந்து பார்த்துக்கொண்டு அவைகளின் நிழலில் பகலிலும், தரையில் இரவிலும் ஆனந்தமாகவே இருந்து வருவார்.] (2)

**कदाचित्प्रासादे क्वचिदपि च सौधेषु धनिनां**
**कदा काले शैले क्वचिदपि च कूलेषु सरिताम् ।**
**कुटीरे दान्तानां मुनिजनवराणामपि वसन्**
**मुनिर्न व्यामोहं भजति गुरुदीक्षाक्षततमाः ॥ ३ ॥**

**கதா3சித்ப்ராஸாதே3 க்வசித3பி ச ஸௌதே4ஷு த4னினாம்**
**கதா3 காலே ஶைலே க்வசித3பி ச கூலேஷு ஸரிதாம் ।**
**குடீரே தா3ந்தானாம் முநிஜனவராணாமபி வஸன்**
**முநிர்ன வ்யாமோஹம் ப4ஜதி கு3ருதீ3க்ஷாக்ஷததமா: ॥ 3 ॥**

**कदाचित्** = ஒரு ஸமயத்தில்,
**கதா3சித்**
**प्रासादे** = அரண்மனையிலும்,
**ப்ராஸாதே3**
**क्वचिदपि च** = வேறு சில ஸமயங்களில்,
**க்வசித3பி ச**
**धनिनां** = பணக்காரர்களுடைய,
**த4னினாம்**
**सौधेषु** = மாடிவீடுகளிலும்,
**ஸௌதே4ஷு**
**कदा काले** = ஒரு ஸமயத்தில்,
**கதா3 காலே**
**शैले** = மலையிலும்,
**ஶைலே**
**क्वचिदपि च** = வேறு சில ஸமயங்களில்,
**க்வசித3பி ச**
**सरिताम्** = நதிகளுடைய,
**ஸரிதாம்**
**कूलेषु** = கரைகளிலும் (சில ஸமயம்)
**கூலேஷு**
**दान्तानां** = இந்திரியங்களை அடக்கியுள்ள,
**தா3ந்தானாம்**
**मुनिजनवराणां** = முனி ஜன சிரேஷ்டர்களுடைய,
**முநிஜனவராணாம்**
**कुटीरे अपि** = குடிசையிலும்,
**குடீரே அபி**
**वसन्** = வஸித்துக்கொண்டிருக்கும்,
**வஸன்**
**मुनिः** = ஞானியானவர்,
**முநி:**
**गुरुदीक्षाक्षततमाः** = குருநாதரால் அருளப்பட்ட ஞானதீக்ஷையினால்
**கு3ருதீ3க்ஷாக்ஷததமா:** அக்ஞானம் நிவர்த்தியானவர் (ஆதலால்),

| | | |
|---|---|---|
| **व्यामोहं**<br>**வ்யாமோஹம்** | = | ஏமாற்றத்தை, |
| **न भजति**<br>**ந ப4ஜதி** | = | அடைகிறதில்லை. |

ஒரு சமயத்தில் அரண்மனையிலும், வேறு சமயங்களில் பணக்காரர்களுடைய மாடிவீடுகளிலும், ஒரு சமயம் மலையிலும், வேறு சமயங்களில் நதிகளுடைய கரைகளிலும், சில சமயம் இந்திரியங்களை அடக்கியுள்ள முனிஜன சிரேஷ்டர்களு டைய குடிசையிலும் வஸித்துக்கொண்டிருக்கும் ஞானியானவர் குரு நாதருடைய கருணையால் கிடைத்த ஞான தீக்ஷையினுல் அக்ஞானம் நிவர்த்தியானவராதலால் ஏமாற்றத்தை அடைகிறதில்லை. **(3)**

**क्वचिद्बालैः सार्धं करतलगतालैः सहसितैः**
**क्वचित्तारुण्यालङ्कृतनरवधूभिः सह रमन् ।**
**क्वचिद्वृद्धैश्चिन्ताकुलित हृदयैश्चापि विलपन्**
**मुनिर्न व्यामोहं भजति गुरुदीक्षाक्षततमाः ॥ ४ ॥**

**க்வசித்3பா3லை: ஸார்த4ம் கரதலக3தாலை: ஸஹஸிதை:**
**க்வசித்தாருண்யாலங்க்ருதனரவதூ4பி4: ஸஹ ரமன் ।**
**க்வசித்3வ்ருத்3தை4ஶ்சிந்தாகுலித ஹ்ருத3யைஶ்சாபி விலபன்**
**முநிர்ன வ்யாமோஹம் ப4ஜதி கு3ருதீ3க்ஷாக்ஷததமா: ॥ 4 ॥**

| | | |
|---|---|---|
| **क्वचित्**<br>**க்வசித்** | = | சில ஸமயங்களில், |
| **करतलगतालैः**<br>**கரதலக3தாலை:** | = | உள்ளங்கைகளினுல் தாளம் போட்டுக்கொண்டு, |
| **सहसितैः**<br>**ஸஹஸிதை:** | = | சிரிப்போடு கூடின, |
| **बालैः सार्धं**<br>**பா3லை: ஸார்த4ம்** | = | பாலர்களோடு கூடவும், |
| **क्वचित्**<br>**க்வசித்** | = | சில ஸமயங்களில், |
| **तारुण्यालङ्कृतनरवधूभिः सह**<br>**தாருண்யாலங்க்ருதனரவதூ4பி4: ஸஹ** | = | யௌவனப் பருவத்தால் அலங்கரிக்கப்பட்டிருக்கும் ஸ்திரீபுருஷர்களோடு கூடவும், |
| **रमन्**<br>**ரமன்** | = | ரமித்துக்கொண்டும், |
| **क्वचित्**<br>**க்வசித்** | = | சில ஸமயங்களில், |

| | | |
|---|---|---|
| **चिन्ताकुलित हृदयै** **விந்தாகுலித ஹ்ருத³யை** | = | கவலையினால் கலங்கின ஹிருதயத்தோடு கூடிய, |
| **वृद्धै** **வ்ருத்³தை⁴** | = | கிழவர்களோடுகூட, |
| **विलपन् चापि** **விலபன் சாபி** | = | புலம்பிக் கொண்டும், இருக்கிற, |
| **मुनिः** **முனிः** | = | ஞானியானவர், |
| **गुरुदीक्षाक्षततमाः** **கு³ருதீ³க்ஷாக்ஷததமாः** | = | குருவினிடம் பெற்ற ஞான தீக்ஷையினால் அக்ஞானம் நிவர்த்தியானவர் (ஆனதினால்), |
| **व्यामोहं** **வ்யாமோஹம்** | = | ஏமாற்றத்தை, |
| **न भजति** **ந ப⁴ஜதி** | = | அடைவதில்லை. |

சில சமயங்களில் உள்ளங் கைகளினால் தாளம் போட்டுக்கொண்டு சிரிப்போடு கூடியிருக்கும் பாலர்களுடனும், சில சமயங்களில் யௌவனப் பருவத்தால் அழகு படுத்தப்பட்டிருக்கும் ஸ்திரீ புருஷர்களுடனும் ரமித்துக்கொண்டும், சில சமயங்களில் கவலையினால் கலங்கின ஹிருதயத்தோடு கூடிய கிழவர்களோடுகூட புலம்பிக் கொண்டும், இருக்கிற ஞானியானவர் குருவிடமிருந்து பெற்ற ஞானதீக்ஷையினால் அஞ்ஞானம் நிவர்த்தியானவராதலால் ஏமாற்றத்தை அடையமாட்டார்.

[அரசர்களுடைய அரண்மனையிலும், தனிகர்களுடைய மாளிகையிலும், மலைகளிலும், நதிக்கரைகளிலும், தபஸ்விகளுடைய குடிசைகளிலும் வஸிப்பதினால் தங்கியிருக்கும் இடங்களினால் ஞானிக்கு மனோவிகாரம் ஏற்படாது என்றிருந்த போதிலும், ஸாமான்ய ஜனங்களோடு பழகும் போது விகாரம் ஏற்படாதாவென்று கேட்கலாம். அதுவும் இல்லை என்று இங்கு காட்டுகிறார். மனிதர்களுடைய வயோவியவஸ்தையை ஸாதாரணமாக பால்யம், யௌவனம், கிழத்தனம் என்று பிரிக்கலாம். இம்மூன்று தசைகளில் இருப்பவர்களோடு கூடவும் அவரவர் மனோபாவத்திற்கு ஒற்றவர்போலவே ஞானி காணப்படுவார். அவருடன் நெருங்குபவர்களின் மனோபாவம் அவரிடமும் இருப்பதாகத் தோற்றம் ஏற்படும். ஆனால் அவர் எவ்வித விகாரமும் அற்றவர்.] **(4)**

**कदाचिद्विद्वद्भिर्विविदिषुभिरत्यन्तनिरतैः**
**कदाचित्काव्यालंकृतिरससारालैः कविवरैः ।**
**कदाचित्सत्तर्कैरनुमितिपरैस्तार्किकवरैः**
**मुनिर्न व्यामोहं भजति गुरुदीक्षाक्षततमाः ॥ ५ ॥**

**கதா³சித்³ வித்³வத்³பி⁴ர் விவிதி³ஷுபி⁴ரத்யந்த நிரதை:**
**கதா³சித் காவ்யாலங்க்ருதிரஸரஸாஊல: கவிவரை: ।**
**கதா³சித் ஸத்தர்கைரனுமிதி பரைஸ் தார்கிக வரை:**
**முநிர்ன வ்யாமோஹம் ப⁴ஜதி கு³ருதீ³க்ஷா க்ஷததமா: ॥ 5 ॥**

| | | |
|---|---|---|
| **कदाचित्** **கதா³சித்** | = | சில ஸமயத்தில், |
| **विद्वद्भिः** **வித்³வத்³பி⁴:** | = | வித்வான்களோடும், |
| **अत्यन्तनिरतैः** **அத்யந்தநிரதை:** | = | மிகவும் அக்கரையுடன்கூடிய, |
| **विविदिषुभिः** **விவிதி³ஷுபி⁴:** | = | ஞானத்தை ஸம்பாதிக்க வேண்டுமென்ற ஆசையுள்ளவர்களோடும், |
| **कदाचित्** **கதா³சித்** | = | சில சமயத்தில், |
| **काव्यालंकृतिरसरसालैः** **காவ்யாலங்க்ருதிரஸரஸாஊல:** | = | காவியங்களிலுள்ள அலங்காரங்களின் ரஸத்தை நன்கு ரஸிக்கும், |
| **कविवरैः** **கவிவரை:** | = | கவிசிரேஷ்டர்களோடும், |
| **कदाचित्** **கதா³சித்** | = | சில சமயத்தில், |
| **सत्तर्कैः** **ஸத்தர்கை:** | = | நியாயமாக தர்க்கம் செய்கிறவர்களும், |
| **अनुमितिपरै** **அனுமிதிபரை** | = | அனுமானப் பிரமாணத்திலேயே ஈடுபட்டவர்களுமான, |
| **तार्किकवरैः** **தார்கிகவரை:** | = | தார்க்கிக சிரேஷ்டர்களோடும் (இருந்து கொண்டு), |
| **मुनिः** **முநி:** | = | ஞானியானவர், |
| **गुरुदीक्षाक्षततमाः** **கு³ருதீ³க்ஷா க்ஷததமா:** | = | குருவினுல் அனுக்ரஹிக்கப்பட்ட ஞான தீக்ஷையினுல் அக்ஞானம் போனவராக இருந்து, |
| **व्यामोहं** **வ்யாமோஹம்** | = | ஏமாற்றத்தை, |
| **न भजति** **ந ப⁴ஜதி** | = | அடைகிறதில்லை. |

சில சமயத்தில் வித்வான்களோடும் மிகவும் அக்கரையுடன் ஞானத்தையடைய ஆவலுள்ளவர்களுடனும், சில சமயத்தில் காவியங்களிலுள்ள அலங்காரங்க

ளின் ரஸத்தை ரஸிக்கும் கவிசிரேஷ்டர்களுடனும், சில சமயத்தில் நியாயமாக தர்க்கம் செய்கிறவர்களும் அனுமானப் பிரமாணத்தையே முக்கியமாயுள்ளவர்களு மான தார்க்கிக சிரேஷ்டர்களுடனும் (கலந்துகொண்டிருக்கும்) ஞானியானவர் தன் குருநாதரால் அளிக்கப்பட்ட ஞான தீக்ஷையினுல் அக்ஞானம் நீங்கியவராக இருப்பதால் ஏமாற்றத்தை அடைய மாட்டார்.

[வேதாந்த தத்வ ஸாக்ஷாத்காரம் அடைந்த ஞானி ஸாமான்ய சாஸ்திரங்கள் அறிந்தவர்களுடனும், அறியப்பிரயத்தினம் செய்பவர்களுடனும் நெருங்கிப் பழகி சர்ச்சை செய்வாரா என்று நினைக்கவேண்டாம். அப்படியே ஸாஹித்யம், அலங்காரம் இவைகளில் ருசியுள்ளவர்களுடன் சேருவாரா, வெறும் தர்க்கத்தையே பரமப்பிரமா ணமாய் வைத்துக்கொண்டு வாதம் பண்ணிக்கொண்டிருக்கும் தார்க்கிகர்களுடன் சேருவாரா, என்றும் ஸந்தேஹிக்கவேண்டாம். எல்லாமே மாயா விலாஸம் என்று அறிந்தவர் யாருடன் தான் சேர முடியாது?] **(5)**

**कदा ध्यानाभ्यासैः क्वचिदपि सपर्यां विकसितैः**
**सुगंधैः सत्पुष्पैः क्वचिदपि दलैरेव विमलैः ।**
**प्रकुर्वन्देवस्य प्रमुदितमनाः संनतिपरो**
**मुनिर्न व्यामोहं भजति गुरुदीक्षाक्षततमाः ॥ ६ ॥**

**கதா³ த்⁴யாநாப்⁴யாஸை: க்வசித³பி ஸபர்யாம் விகஸிதை:**
**ஸுக³ந்தை⁴: ஸத்புஷ்பை: க்வசித³பி த³ளைரேவ விமளை: ।**
**ப்ரகுர்வந் தே³வஸ்ய ப்ரமுதி³தமனு: ஸம்நதிபரோ**
**முநிர்ன வ்யாமோஹம் ப⁴ஜதி கு³ருதீ³க்ஷாக்ஷததமா: ॥ 6 ॥**

**कदा** = சில ஸமயம்,
**கதா³**

**ध्यानाभ्यासैः** = தியானாப்யாஸங்களோடும்,
**த்⁴யாநாப்⁴யாஸை:**

**क्वचिदपि** = சில ஸமயத்தில்,
**க்வசித³பி**

**विकसितैः** = நன்கு மலர்ந்த,
**விகஸிதை:**

**सुगंधैः** = நல்ல வாஸனையாயுள்ள,
**ஸுக³ந்தை⁴:**

**सत्पुष्पैः** = சிறந்த புஷ்பங்களினுலும்,
**ஸத்புஷ்பை:**

**क्वचिदपि** = சில ஸமயங்களில்,
**க்வசித³பி**

| | | |
|---|---|---|
| **विमलैः**<br>**விமலை:** | = | சுத்தமான, |
| **दलैरेव**<br>**த$^3$லைரேவ** | = | இதழ்களாலே மாத்திரமும், |
| **प्रमुदितमनाः**<br>**ப்ரமுதி$^3$தமனா:** | = | ஸந்தோஷமடைந்த மனஸுடன், |
| **संनतिपरः**<br>**ஸம்நதிபர:** | = | மிகுந்த வினயத்துடன் கூடியவராக, |
| **देवस्य**<br>**தே$^3$வஸ்ய** | = | பகவானுடைய, |
| **सपर्यां**<br>**ஸபர்யாம்** | = | பூஜையை, |
| **प्रकुर्वन्**<br>**ப்ரகுர்வன்** | = | நன்கு செய்துகொண்டிருக்கும், |
| **मुनिः**<br>**முநி:** | = | ஞானியானவர், |
| **गुरुदीक्षाक्षततमाः**<br>**கு$^3$ருதீ$^3$க்ஷாக்ஷததமா:** | = | குருவினுல் அருளப்பட்ட ஞானதீக்ஷையினுல் அக்ஞானம் போனவராய், |
| **व्यामोहं**<br>**வ்யாமோஹம்** | = | ஏமாற்றத்தை, |
| **न भजति**<br>**ந ப$^4$ஜதி** | = | அடைவதில்லை. |

சில சமயம் தியானாப்பியாஸங்களோடும், சில சமயத்தில் நன்கு மலர்ந்த நல்ல வாசனையுள்ள சிறந்த புஷ்பங்களாலும், சில சமயங்களில் சுத்தமான இதழ்களாலே மாத்திரமும், ஸந்தோஷமடைந்த மனத்துடன் மிகுந்த வினயத்துடன் கூடியவராக பகவானுடைய பூஜையை நன்கு செய்துகொண்டும் இருக்கும் ஞானியானவர் குருவினுல் அருளப்பட்ட ஞான தீக்ஷையினுல் அக்ஞானம் போனவராய் ஏமாற்றத்தை அடைவதில்லை.

[நாம ரூபங்களுக்கு அதீதமான சுத்த பிரஹ்மத்தை ஸாக்ஷாத்கரித்த ஞானி பகவானுடைய ஸகுண மூர்த்தியை தியானம் செய்வாரா, அந்த பகவானை அர்ச்சா ரூபத்தில் ஆவாஹனாதிகள் செய்து பூஜை செய்வாரா, என்ற ஸந்தேஹமும் வேண்டாம். ஸர்வ வியாபகமான பிரஹ்ம சைதன்யம் ஹிருதயத்தில் தியான விஷயமாகவும், வெளியில் ஆராதிக்கக்கூடிய அர்ச்சா ரூபமாகவும் இருப்பதில் என்ன ஆச்சர்யம் என்று உணர்ந்தவர் ஞானி.] **(6)**

**शिवायाः शंभोर्वा क्वचिदपि च विष्णोरपि कदा**
**गणाध्यक्षस्यापि प्रकटितवरस्यापि च कदा ।**

**पठन्वै नामालिं नयनरचितानन्दसरितो**
**मुनिर्न व्यामोहं भजति गुरुदीक्षाक्षततमाः ॥ ७ ॥**

**ஶிவாயாஃ ஶம்போ⁴ர்வா க்வசித³பி ச விஷ்ணோரபி கதா³**
**க³ணாத்⁴யக்ஷஸ்யாபி ப்ரகடிதவரஸ்யாபி ச கதா³ ।**
**பட²ன்வை நாமாலிம் நயனரசிதானந்த³ஸரிதோ**
**முநிர்ன வ்யாமோஹம் ப⁴ஜதி கு³ருதீ³க்ஷாக்ஷததமாஃ ॥ 7 ॥**

| | | |
|---|---|---|
| **क्वचिदपि च** க்வசித³பி ச | = | சில சமயங்களில், |
| **शिवायाः** ஶிவாயாஃ | = | அம்பிகையின், |
| **शंभोर्वा** ஶம்போ⁴ர்வா | = | அல்லது பரமசிவனின், |
| **कदा अपि** கதா³ அபி | = | சில சமயத்தில், |
| **विष्णोः** விஷ்ணோஃ | = | விஷ்ணுவின், |
| **गणाध्यक्षस्यापि** க³ணாத்⁴யக்ஷஸ்யாபி | = | மஹாகணபதியின், |
| **कदा** கதா³ | = | ஒரு சமயம், |
| **प्रकटितवरस्यापि च** ப்ரகடிதவரஸ்யாபி ச | = | வரன் கொடுக்கும் முத்திரை காட்டும் தேவதையின், |
| **नामालिं** நாமாலிம் | = | நாமாவளியை, |
| **नयनरचितानन्दसरितो** நயனரசிதானந்த³ஸரிதோ | = | கண்களில் ஏற்பட்ட ஆனந்தக்கண்ணீர் பெருக்குடன், |
| **पठन्वै** பட²ன்வை | = | படித்துக்கொண்டிருக்கும், |
| **मुनिः** முநிஃ | = | ஞானியானவர், |
| **गुरुदीक्षाक्षततमाः** கு³ருதீ³க்ஷாக்ஷததமாஃ | = | குருவின் அனுக்ரஹத்தால் கிடைத்தஞானதீக்ஷை யினுல் அக்ஞானம் போனவராய், |
| **व्यामोहं** வ்யாமோஹம் | = | ஏமாற்றத்தை, |
| **न भजति** ந ப⁴ஜதி | = | அடைவதில்லை. |

சில சமயங்களில் அம்பிகையின் (நாமாவளியை) அல்லது பரமசிவனின் (நாமாவளியை) அல்லது மஹா விஷ்ணுவின் (நாமாவளியை) சில ஸமயத்தில் மஹாகணபதியின் (நாமாவளியை) அப்படியே வர முத்திரை தரிக்கும் தேவதை யின் (நாமாவளியையோ) கண்களில் ஆனந்தக்கண்ணீர் பெருக வாசித்துக் கொண்டி ருக்கும் ஞானியானவன் குருவின் அனுக்ரஹத்தினுல் கிடைத்த ஞான தீக்ஷை யினுல் அக்ஞானம் விலகினவராதலால் ஏமாற்றத்தை அடையமாட்டார்.

[ஞானியின் திருஷ்டியில் எல்லா ஸகுண மூர்த்திகளும் சைதன்யத்திலிருந்து வேறல்லவாதலால், அவர் எல்லா மூர்த்திகளிடத்திலும் பிரஹ்மாகார விருத்தியுடன் கூடினவர். ஒவ்வொரு தேவதைக்கும் ஏற்பட்ட நாமாவளியிலுள்ள ஒவ்வொரு நாமாவும் ஒவ்வொரு பெருமையையே விளக்குவதால், அந்தந்த நாமாவை உச்சரிக் கும்போது அதற்கு விஷயமான தத்வம் மனஸில் தனித்துப் பிரகாசிப்பதால் ஆனந்த பாஷ்பம் ஏற்படுவது ஸஹஜமே. இதனுல் ஞானி தன் நிலையிலிருந்து கொஞ்சம் இறங்கிவிட்டார் என்று நினைப்பதற்கில்லை.] **(7)**

**कदा गङ्गाम्भोभिः क्वचिदपि च कूपोत्थसलिलैः**
**क्वचित्कासारोत्थैः क्वचिदपि सदुष्णैश्च शिशिरैः ।**
**भजन्स्नानं भूत्या क्वचिदपि च कर्पूरनिभया**
**मुनिर्न व्यामोहं भजति गुरुदीक्षाक्षततमाः ॥ ८॥**

**கதா$^{3}$ க$^{3}$ங்கா$^{3}$ம்போ$^{4}$பி$^{4}$: க்வசித$^{3}$பி ச கூபோத்த$^{2}$ஸலிலை:**
**க்வசித்காஸாரோத்தை$^{2}$: க்வசித$^{3}$பி ஸது$^{3}$ஷ்ணைஶ்ச ஶிஶிரை: ।**
**ப$^{4}$ஜன்ஸ்னானம் பூ$^{4}$த்யா க்வசித$^{3}$பி ச கர்பூரனிப$^{4}$யா**
**முனிர்ன வ்யாமோஹம் ப$^{4}$ஜதி கு$^{3}$ருதீ$^{3}$க்ஷாக்ஷததமா: ॥ 8॥**

**कदा** = ஒரு சமயம்,
**கதா$^{3}$**
**गङ्गाम्भोभिः** = கங்கா ஜலத்தினுல்,
**க$^{3}$ங்கா$^{3}$ம்போ$^{4}$பி$^{4}$:**
**क्वचिदपि च** = சில சமயம்,
**க்வசித$^{3}$பி ச**
**कूपोत्थसलिलैः** = கிணற்றில் ஊறும் ஜலத்தினுல்,
**கூபோத்த$^{2}$ஸலிலை:**
**क्वचित्** = ஒரு சமயம்,
**க்வசித்**
**कासारोत्थैः** = குளத்திலுள்ள ஜலத்தினுல்,
**காஸாரோத்தை$^{2}$:**
**क्वचिदपि** = சில சமயம்,
**க்வசித$^{3}$பி**

| | | |
|---|---|---|
| **कासारोत्थैः**<br>**காஸாரோத்தை²꞉** | = | நல்ல சூடான வென்னீரினால், |
| **शिशिरैश्च**<br>**ஶிஶிரைஶ்ச** | = | (சில சமயம்) குளிர்ந்த ஜலத்தினால், |
| **क्वचिदपि च**<br>**க்வசித³பி ச** | = | சில சமயத்தில், |
| **कर्पूरनिभया**<br>**கர்பூரனிப⁴யா** | = | கர்பூரம் மாதிரி பிரகாசிக்கிற, |
| **भूत्या**<br>**பூ⁴த்யா** | = | விபூதியினால், |
| **स्नानं**<br>**ஸ்னானம்** | = | ஸ்நாநத்தை, |
| **भजन्**<br>**ப⁴ஜன்** | = | செய்துகொண்டு இருக்கிற, |
| **मुनिः**<br>**முநி꞉** | = | ஞானியானவர், |
| **गुरुदीक्षाक्षततमाः**<br>**கு³ருதீ³க்ஷாக்ஷததமா꞉** | = | குருவினுடைய அனுக்ரஹத்தால் ஏற்பட்ட ஞான தீக்ஷையினால் அக்ஞானம் விலகினவராதலால், |
| **व्यामोहं**<br>**வ்யாமோஹம்** | = | ஏமாற்றத்தை, |
| **न भजति**<br>**ந ப⁴ஜதி** | = | அடைகிறதில்லை. |

ஒரு சமயம் கங்கா ஜலத்தினால், சில சமயம் கிணற்றில் ஊறும் ஜலத்தினால், ஒரு சமயம் குளத்திலுள்ள ஜலத்தினால் சில சமயம் நல்ல சூடான வென்னீரால், சில சமயம் குளிர்ந்த ஜலத்தினால், சிலசமயத்தில் கர்பூரம் மாதிரி பிரகாசிக்கும் விபூதியினால், ஸ்நாநம் செய்துகொண்டிருக்கிற ஞானியானவர் குருநாதருடைய கருணையால் அடைந்த ஞான தீக்ஷையினால் அக்ஞானம் விலகினவராதலால் ஏமாற்றத்தை அடைகிறதில்லை.

[தர்ம சாஸ்திரங்களில் ஸ்நானத்திற்கு உத்தமமாக கங்கா ஜலத்தையும், அதற்கு அடுத்தபடியாக மற்ற நதிகளின் ஜலத்தையும், அதற்கும் அடுத்தபடியாக குளத்து ஜலத்தையும், அதற்கும் அடுத்தபடியாகக் கடைசியாக கிணற்று ஜலத்தையும் சொல்லப்பட்டிருக்கிறது. ஜலத்திலும் வென்னீரை ரோகிகளுக்கு விதித்துவிட்டு ஸாதாரணமாகக் குளிர்ந்த ஜலமே சொல்லப்பட்டிருக்கிறது. மேலே கண்ட எந்த விதத்திலும் ஸ்நாம் செய்யமுடியாதவர்களுக்கு விபூதி ஸ்னநம் விதிக்கப்பட்டிருக்கிறது. ஞானி விஷயத்தில் இவ்வித வேற்றுமை தாரதம்யம் ஒன்றும் கிடையாதென்பது இந்த சுலோகத்தில் குறிப்பிடப்பட்டிருக்கிறது.] **(8)**

**कदाचित्जागर्त्यां विषयकरणैः संव्यवहरन्**
**कदाचित्स्वप्नस्थानपि च विषयानेव च भजन् ।**
**कदाचित्सौषुप्तं सुखमनुभवन्नेव सततं**
**मुनिर्न व्यामोहं भजति गुरुदीक्षाक्षततमाः ॥ ९ ॥**

**கதா³சித் ஜாக³ர்த்யாம் விஷயகரணை: ஸம்வ்யவஹரன்**
**கதா³சித் ஸ்வப்னஸ்தா²னபி ச விஷயானேவ ச ப⁴ஜன் ।**
**கதா³சித் ஸௌஷுப்தம் ஸுக²மனுப⁴வன்னேவ ஸததம்**
**முநிர்ன வ்யாமோஹம் ப⁴ஜதி கு³ருதீ³க்ஷாக்ஷததமா: ॥ 9 ॥**

**कदाचित्** = ஒரு சமயம்,
**கதா³சித்**
**जागर्त्यां** = விழித்துக்கொண்டிருக்கும் போது,
**ஜாக³ர்த்யாம்**
**विषयकरणैः** = விஷயங்களோடும் இந்திரியங்களோடும்,
**விஷயகரணை:**
**संव्यवहरन्** = நன்கு வியவஹாரம் செய்துகொண்டும்,
**ஸம்வ்யவஹரன்**
**कदाचित्** = ஒரு சமயம்,
**கதா³சித்**
**स्वप्नस्थानपि च** = ஸ்வப்ன தசையிலேயே இருக்கக் கூடிய,
**ஸ்வப்னஸ்தா²னபி ச**
**विषयानेव च** = விஷயங்களையே,
**விஷயானேவ ச**
**भजन्** = ஸேவித்துக் கொண்டும்,
**ப⁴ஜன்**
**कदाचित्** = ஒரு சமயம்,
**கதா³சித்**
**सौषुप्तं** = ஸுஷுப்தி என்கிற நல்ல தூக்கத்திலுள்ள,
**ஸௌஷுப்தம்**
**सुखं** = ஸுகத்தை,
**ஸுக²ம்**
**सततं** = இடைவிடமல்,
**ஸததம்**
**अनुभवन्नेव** = அனுபவித்துக்கொண்டேயும் இருக்கிற,
**அனுப⁴வன்னேவ**

**मुनिः** = ஞானியானவர்,

**முநி:**

**गुरुदीक्षाक्षततमाः** = குருவினுல் அனுக்ரஹிக்கப்பட்ட ஞான

**கு³ருதீ³க்ஷாக்ஷததமா:** தீக்ஷையினுல் அக்ஞானம் போனவராதலால்,

**व्यामोहं** = ஏமாற்றத்தை,

**வ்யாமோஹம்**

**न भजति** = அடைவதில்லை.

**ந ப⁴ஜதி**

ஒரு சமயம் விழித்துக்கொண்டிருக்கும்போது விஷயங்களோடும் இந்திரியங்களோடும் நன்கு வியவஹாரம் செய்து கொண்டும், ஒரு சமயம் ஸ்வப்ன தசையிலேயே இருக்கக்கூடிய விஷயங்களையே ஸேவித்துக்கொண்டும், ஒரு சமயம் ஸுஷுப்தி என்கிற நல்ல தூக்கத்திலுள்ள ஸுகத்தை இடைவிடாமல் அனுபவித்துக் கொண்டேயும் இருக்கிற ஞானியானவர் குருவினுல் அனுக்ரஹிக்கப்பட்ட ஞான தீக்ஷையினுல் அக்ஞானம் போனவராதலால் ஏமாற்றத்தை அடைவதில்லை.

[பிராரப்த கர்மாவின் வேகத்தால் ஸுகதுக்கங்களை அனுபவிக்கவேண்டியதாக ஏற்படும் சமயங்களில் ஞானிக்கும் ஜாக்கிரத், ஸ்வப்னம், ஸுஷுப்தி, என்று சொல்லப்படும் மூன்று அவஸ்தைகளும் உண்டு. ஆனுல் தன்னுடைய ஆத்ம ஸ்வரூபம் வாஸ்தவத்தில் கர்மாவிற்கும் அதீதம் கர்ம பலனுக்கும் அதீதம், அதாவது ஆத்மா கர்த்தாவுமல்ல, போக்தாவுமல்ல, என்ற ஞானம் அவனுக்கு ஸ்திரமாக ஏற்பட்டு விட்டபடியால் இந்த மூன்று அவஸ்தைகளிலும் சரீரத்தையோ மனஸையோ ஒட்டியுள்ள ஸுகதுக்கங்கள் சரீரம் மனஸ் எல்லாவற்றிற்கும் அதீதமாக இருக்கிற ஆத்மாவில் எவ்விதத்திலும் ஸம்பந்தப்படக்கூடியதில்லை யென்ற தீர்மானத்துடன் அந்த ஸுகதுக்கங்களையும் ஸாக்ஷியாகவே இருந்துகொண்டு பார்த்து வருவார்.] **(9)**

**कदाऽप्याशावासाःक्वचिदपि च दिव्याम्बरधरः**
**क्वचित्पञ्चास्योत्थां त्वचमपि दधानः कटितटे ।**
**मनस्वी निःसङ्गः सुजनहृदयानन्दजनको**
**मुनिर्न व्यामोहं भजति गुरुदीक्षाक्षततमाः ॥ १० ॥**

**கதா³(அ)ப்யாஶாவாஸா: க்வசித³பி ச தி³வ்யாம்ப³ரத⁴ர:**
**க்வசித்பஞ்சாஸ்யோத்தா²ம் த்வசமபி த³தா⁴ன: கடிதடே ।**
**மனஸ்வீ நி:ஸங்க³: ஸுஜனஹ்ருத³யானந்த³ஜனகோ**
**முநிர்ன வ்யாமோஹம் ப⁴ஜதி கு³ருதீ³க்ஷாக்ஷததமா: ॥ 10 ॥**

**कदाऽपि** = ஒரு சமயம்,

**கதா³(அ)பி**

| | | |
|---|---|---|
| **आशावासा:**<br>**ஆஶாவாஸா:** | = | திகம்பரராகவும், |
| **क्वचिदपि च**<br>**க்வசித$^{3}$பி ச** | = | சில ஸமயங்களில், |
| **दिव्याम्बरधर:**<br>**தி$^{3}$வ்யாம்ப$^{3}$ரத$^{4}$ர:** | = | அழகான வஸ்திரத்தை உடுத்திக்கொண்டவ ராகவும், |
| **क्वचित्**<br>**க்வசித்** | = | சில ஸமயம், |
| **पञ्चास्योत्थां**<br>**பஞ்சாஸ்யோத்தா$^{2}$ம்** | = | ஸிம்ஹத்திலிருந்து உண்டான, |
| **त्वचं अपि**<br>**த்வசம் அபி** | = | தோஜலயும், |
| **कटितटे**<br>**கடிதடே** | = | இடுப்புப்பிரதேசத்தில், |
| **दधान:**<br>**த$^{3}$தா$^{4}$ன:** | = | உடுத்திக்கொண்டவராகவும், |
| **मनस्वी**<br>**மனஸ்வீ** | = | நல்ல மனஸோடுகூடினவராகவும், |
| **नि:सङ्ग:**<br>**நி:ஸங்க$^{3}$:** | = | பற்றற்றவராகவும், |
| **सुजनहृदयानन्दजनक:**<br>**ஸுஜனஹ்ருத$^{3}$யானந்த$^{3}$ஜனக:** | = | ஸாது ஜனங்களுடைய ஹிருதயத்திற்கு ஆனந்த த்தை உண்டுபண்ணுகிற வராகவும் இருக்கிற, |
| **मुनि:**<br>**முநி:** | = | ஞானியானவர், |
| **गुरुदीक्षाक्षततमा:**<br>**கு$^{3}$ருதீ$^{3}$க்ஷாக்ஷததமா:** | = | குரு அருளின ஞானதீக்ஷையால் அக்ஞானம் விலகினவராய், |
| **व्यामोहं**<br>**வ்யாமோஹம்** | = | ஏமாற்றத்தை, |
| **न भजति**<br>**ந ப$^{4}$ஜதி** | = | அடைகிறதில்லை. |

ஒரு சமயம் திகம்பரராகவும், சில சமயங்களில் அழகான வஸ்திரத்தை உடுத்திக்கொண்டவராகவும், சில சமயம் ஸிம்ஹத்திலிருந்து உண்டான தோஜலயும் இடுப்புப் பிரதேசத்தில் உடுத்திக்கொண்டவராகவும், நல்ல மனஸோடு கூடினவராக வும், பற்றற்றவராகவும், ஸாது ஜனங்களுடைய ஹிருதயத்திற்கு ஆனந்தத்தை உண்டுபண்ணுகிறவராகவும் இருக்கிற ஞானியானவர் குரு அருளின ஞான தீக்ஷையால் அக்ஞானம் விலகினவராய் ஏமாற்றத்தை அடைகிறதில்ஜல.

[ஞானிக்கு வஸ்திரதாரணம் முதலான நியமங்களும் கிடையாது, சரீராதிகளுக்கு மேல்பட்டதாயுள்ள ஆத்ம ஸ்வரூபத்தின் ஆனந்தானுபவத்தைத் தன்னிடம் நெருங்கிவரும் ஸாதுக்களுக்கும் கொடுக்கிறார்.] **(10)**

**कदाचित्सत्त्वस्थः क्वचिदपि रजोवृत्तिसुगत-**
**स्तमोवृत्तिः क्वापि त्रितयरहितः क्वापि च पुनः ।**
**कदाचित्संसारी श्रुतिपथविहारी क्वचिदहो**
**मुनिर्न व्यामोहं भजति गुरुदीक्षाक्षततमाः ॥ ११ ॥**

**கதா³சித் ஸத்த்வஸ்த²꞉ க்வசித³பி ரஜோவ்ருத்தி ஸுக³தஸ்**
**தமோ வ்ருத்தி꞉ க்வாபி த்ரிதய ரஹித꞉ க்வாபி ச புன꞉ ।**
**கதா³சித் ஸம்ஸாரீ ஶ்ருதிபத² விஹாரீ க்வசித³ஹோ**
**முநிர்ன வ்யாமோஹம் ப⁴ஜதி கு³ருதீ³க்ஷாக்ஷததமா꞉ ॥ 11 ॥**

**कदाचित्** = ஒரு ஸமயம்,
**கதா³சித்**
**सत्त्वस्थः** = ஸத்வகுணத்தில் இருப்பவராகவும்,
**ஸத்த்வஸ்த²꞉**
**क्वचिदपि** = ஒரு ஸமயம்,
**க்வசித³பி**
**रजोवृत्तिसुगतः** = ரஜோகுண நடத்தையில் நன்கு ஈடுபட்டவராகவும்,
**ரஜோவ்ருத்தி ஸுக³த꞉**
**क्वापि** = ஒரு ஸமயம்,
**க்வாபி**
**तमोवृत्तिः** = தமோகுண நடத்தையுள்ளவராகவும்,
**தமோவ்ருத்தி꞉**
**पुनः** = மறுபடியும்,
**புன꞉**
**क्वापि च** = ஒரு சமயம்,
**க்வாபி ச**
**त्रितयरहितः** = முக்குணங்களற்றவராகவும்,
**த்ரிதய ரஹித꞉**
**कदाचित्** = ஒரு சமயம்,
**கதா³சித்**
**संसारी** = (ஸுகதுக்கங்களை அனுபவிக்கும்) ஸம்ஸாரி
**ஸம்ஸாரீ** யாகவும்,
**क्वचित्** = ஒரு சமயம்,
**க்வசித்**

| | | |
|---|---|---|
| **श्रुतिपथविहारी**<br>**ஶ்ருதிபத² விஹாரீ** | = | வேதமார்க்கத்தில் சஞ்சரிக்கிறவராகவும், |
| **अहो**<br>**அஹோ** | = | என்ன ஆச்சர்யம்? (தோன்றுகிற), |
| **मुनिः**<br>**முநி:** | = | ஞானியானவர், |
| **गुरुदीक्षाक्षततमाः**<br>**கு³ருதீ³க்ஷாக்ஷததமா:** | = | குருவின் அருளால் கிடைத்த ஞானதீக்ஷையினுல் அக்ஞானம் நீங்கினவராகி, |
| **व्यामोहं**<br>**வ்யாமோஹம்** | = | ஏமாற்றத்தை, |
| **न भजति**<br>**ந ப⁴ஜதி** | = | அடைவதில்லை. |

ஒரு சமயம் ஸத்வ குணத்தில் இருப்பவராகவும், ஒரு சமயம் ரஜோகுண நடத்தையில் நன்கு ஈடுபட்டவராகவும், ஒரு சமயம் தமோகுண நடத்தையுள்ளவராக வும், மறுபடியும் ஒரு சமயம் முக்குணங்களுமற்றவராகவும், ஒரு சமயம் ஸுகதுக்கங்களை அனுபவிக்கும் ஸம்ஸாரியாகவும், ஒரு சமயம் வேதமார்க்கத்தில் ஸஞ்சரிக்கிறவராகவும், என்ன ஆச்சரியம்? தோன்றுகிற ஞானியானவர் குருவின் அருளால் கிடைத்த ஞான தீக்ஷையினுல் அக்ஞானம் நிவர்த்தியானவராகி ஏமாற்ற த்தை அடைவதில்லை.

[குணுதீத நிலையை அடைந்துவிட்ட போதிலும் ஞானிக்கு சரீரம் இருக்கும் வரை, முக்குணங்களுக்கும் கட்டுப்பட்ட உபாதிகளாகிய மனஸ் முதலானதுகளில், பிராரப்த கர்மாவினுல் ஒவ்வொரு சமயம் ஒவ்வொரு குணம் மேலிடும். அந்தந்த குணங்களுக்குத் தக்கப்படி மனோவிருத்திகளும் சரீர சேஷ்டைகளும் ஏற்படும். இவைகளெல்லாவற்றையும் மாயையின் லீலை யென்று, அவைகளினுல் பாதிக்கப் படாமல், ஸாக்ஷியாக இருந்து பார்த்துக்கொண்டிருப்பார் ஞானி.] **(11)**

**कदाचिन्मौनस्थः क्वचिदपि च वाग्वादनिरतः**
**कदाचित्सानन्दं हसितरभसस्त्यक्तवचनः ।**
**कदाचित्लोकानां व्यवहृतिसमालोकनपरो**
**मुनिर्न व्यामोहं भजति गुरुदीक्षाक्षततमाः ॥ १२ ॥**

**கதா³சின் மௌனஸ்த²: க்வசித³பி ச வாக்³வாத³ நிரத:**
**கதா³சித் ஸானந்த³ம் ஹஸித ரப⁴ஸஸ் த்யக்த வசன: ।**
**கதா³சித் லோகானும் வ்யவஹ்ருதி ஸமாலோகன பரோ**
**முநிர்ன வ்யாமோஹம் ப⁴ஜதி கு³ருதீ³க்ஷா க்ஷததமா: ॥ 12 ॥**

**कदाचित्** = ஒரு வேளை,
**கதா³சித்**

**मौनस्थः** = மௌன நிலையில் இருந்து கொண்டும்,
**மௌனஸ்த²:**

**क्वचिदपि च** = மற்றொரு வேளையில்,
**க்வசித³பி ச**

**वाग्वादनिरतः** = வாக்குவாதத்தில் ஈடுபட்டுக்கொண்டும்,
**வாக்³வாத³ நிரத:**

**कदाचित्** = ஒரு வேளை,
**கதா³சித்**

**सानन्दं** = ஆனந்தமாக,
**ஸானந்த³ம்**

**हसितरभसः** = சிரிப்பின் வேகத்தினால்,
**ஹஸிதரப⁴ஸ:**

**त्यक्तवचनः** = பேசாமலிருந்துகொண்டும்,
**த்யக்தவசன:**

**कदाचित्** = ஒரு வேளை,
**கதா³சித்**

**लोकानां** = உலகத்தார்களுடைய,
**லோகானும்**

**व्यवहृतिसमालोकनपरः** = வியவஹாரங்களைப் பார்ப்பதிலேயே ஈடுபட்டு
**வ்யவஹ்ருதிஸமாலோகனபர:** மிருக்கிற,

**मुनिः** = ஞானியானவர்,
**முநி:**

**गुरुदीक्षाक्षततमाः** = குருவினால் அநுக்ரஹிக்கப்பட்ட ஞானதீக்ஷை
**கு³ருதீ³க்ஷா க்ஷததமா:** யினால் அக்ஞானம் நிவர்த்தியானவர்,

**व्यामोहं** = ஏமாற்றத்தை,
**வ்யாமோஹம்**

**न भजति** = அடைகிறதில்லை.
**ந ப⁴ஜதி**

ஒரு வேளை மௌன நிலையில் இருந்துகொண்டும், மற்றொரு வேளையில் வாக்குவாதத்தில் ஈடுபட்டுக்கொண்டும், ஒரு வேளை ஆனந்தமாக சிரிப்பின் வேகத்தினால் பேசாமலிருந்துகொண்டும், ஒரு வேளை உலகத்தார்களுடைய வியவஹாரங்களைப் பார்ப்பதிலே ஈடுபட்டும் இருக்கிற ஞானியானவர் குருவினால் அனுக்ரஹிக்கப் பட்ட ஞானதீக்ஷையினால் அக்ஞானம் நிவர்த்தியானவர் ஏமாற்றத்தை அடைகிறதில்லை.

[ஆத்மானுஸந்தானம் செய்கையில் ஞானி மௌனமாகவே இருப்பார். பஹிர்முக தசையில் மற்றவர்களுக்கு உபதேசம் செய்யவேண்டிய ஸந்தர்ப்பத்தில் வேதாந்த ரஹஸ்யங்களை விஸ்தரித்துச் சொல்லும்படி ஏற்படும். வாக்குவாதம் என்றால் வீண் பேச்சு என்ற அர்த்தமில்லை. ஆத்மானுஸந்தானம் செய்யும் சமயம் உள்ளிருந்து ஆனந்தம் பொங்கி வெளிக் கிளம்பும்போது தன்னைத் தெரியாமல் கண்களில் நீர் தளும்பும், சிரிப்பு வரும், நர்த்தனம் செய்யச் சொல்லும். ஆனாலும் ஏன் கண்களில் ஜலம், ஏன் சிரிப்பு, ஏன் நர்த்தனம் என்று கேட்டால் உள்ளுள்ள அனுபவம் வாக்கினால் சொல்லக்கூடியதில்லாததினால் வார்த்தை வெளியில் வராது. தன்னுடைய ஆனந்தானுபவத்திற்கு பாதகமன்னியிலேயே வெளி உலகத்தார் நடந்து கொள்ளும் வைசித்திரியத்தை உதாஸீனமாயிருந்துகொண்டு பார்த்து வருவார் ஞானி.] **(12)**

**कदाचित्छक्तीनां विकचमुखपद्मेषु कमलं**
**क्षिपंस्तासां क्वापि स्वयमपि च गृह्णन्स्वमुखतः ।**
**तदद्वैतं रूपं निजपरविहीनं प्रकटयन्**
**मुनिर्न व्यामोहं भजति गुरुदीक्षाक्षततमाः ॥ १३ ॥**

**கதா³சித் ச²க்தீனாம் விகச முக²பத்³மேஷு கமலம்**
**க்ஷிபம்ஸ்தாஸாம் க்வாபி ஸ்வயமபி ச க்³ருஹ்ணன் ஸ்வமுக²த: ।**
**தத³த்³வைதம் ரூபம் நிஜபரவிஹீனம் ப்ரகடயன்**
**முநிர்ந வ்யாமோஹம் ப⁴ஜதி கு³ருதீ³க்ஷா க்ஷததமா: ॥ 13 ॥**

| | | |
|---|---|---|
| **कदाचित्** <br> **கதா³சித்** | = | ஒரு சமயத்தில், |
| **शक्तीनां** <br> **ஶக்தீனாம்** | = | ஸ்திரீகளுடைய, |
| **विकचमुखपद्मेषु** <br> **விகச முக²பத்³மேஷு** | = | மலர்ந்த பத்மம்போலுள்ள முகங்களில், |
| **कमलं** <br> **கமலம்** | = | தாமரையை, |
| **क्षिपन्** <br> **க்ஷிபன்** | = | விட்டெறிந்துகொண்டும், |
| **क्वापि** <br> **க்வாபி** | = | ஒரு சமயத்தில், |
| **स्वयमपि च** <br> **ஸ்வயமபி ச** | = | தானும், |
| **तासां** <br> **தாஸாம்** | = | அந்த ஸ்திரீகளால் (போடப்படும் தாமரையை), |

| | | |
|---|---|---|
| **स्वमुखतः** | = | தன் முகத்தில், |
| **ஸ்வமுக²த:** | | |
| **गृह्णन्** | = | வாங்கிக்கொண்டும், |
| **க்³ருஹ்ணன்** | | |
| **निजपरविहीनं** | = | தான் என்பதும் வேறு என்பதும் கிடையாத |
| **நிஜபரவிஹீனம்** | | தாய், |
| **अद्वैतं** | = | இரண்டற்றதாய் உள்ள, |
| **அத்³வைதம்** | | |
| **तत्** | = | அந்த, |
| **தத்** | | |
| **रूपं** | = | ஸ்வரூபத்தை, |
| **ரூபம்** | | |
| **प्रकटयन्** | = | நன்கு காட்டிக்கொண்டிருக்கிற, |
| **ப்ரகடயன்** | | |
| **मुनिः** | = | ஞானியானவர், |
| **முநி:** | | |
| **गुरुदीक्षाक्षततमाः** | = | குரு அருளின தீக்ஷையினுல் அக்ஞானம் |
| **கு³ருதீ³க்ஷா க்ஷததமா:** | | விலகினவராய், |
| **व्यामोहं** | = | ஏமாற்றத்தை, |
| **வ்யாமோஹம்** | | |
| **न भजति** | = | அடைகிறதில்லை. |
| **ந ப⁴ஜதி** | | |

ஒரு சமயத்தில் ஸ்திரீகளுடைய மலர்ந்த பத்மம் போலுள்ள முகங்களில் தாமரையை விட்டெறிந்துகொண்டும், ஒரு ஸமயத்தில் தானும் அந்த ஸ்திரீகளால் போடப்படும் தாமரையை தன் முகத்தில் வாங்கிக்கொண்டும், தான் என்பதும் வேறு என்பதும் கிடையாததாய் இரண்டற்றதாய் உள்ள அந்த (ஆத்ம) ஸ்வரூபத்தை நன்கு விளக்கிக் காட்டிக்கொண்டும் இருக்கிற ஞானியானவர் குரு அருளின் ஞான தீக்ஷை யினுல் அக்ஞானம் விலகினவராய் ஏமாற்றத்தை அடைகிறதில்லை.

[ஸ்திரீ புமான் என்கிற வேற்றுமை சரீரத்தைச் சேர்ந்ததே தவிர ஆத்மாவில் கிடையாது என்ற உண்மையை நன்கு உணர்ந்திருக்கும் ஞானிக்கு ஸ்திரீகளைக் கண்டு ஸங்கோசமோ, மனோ விகாரமோ ஏற்படுவதற்கு நியாயமே இல்லாததினுல், அவர் ஸ்திரீகளோடு பத்மங்களை விட்டெறிந்துகொண்டு விளையாடும்போதும் இரண்டற்ற ஆத்ம ஸ்வரூபத்தையே விளக்குவார்.] **(13)**

**क्वचिच्छैवैः सार्धं क्वचिदपि च शाक्तैः सह वसन्**

**कदा विष्णोर्भक्तैः क्वचिदपि च सौरैः सह वसन् ।**

**कदा गाणाध्यक्षैर्गतसकलभेदोऽद्वयतया**
**मुनिर्न व्यामोहं भजति गुरुदीक्षाक्षततमाः ॥ १४ ॥**

**க்வசிச் சை²வை: ஸார்த⁴ம் க்வசித³பி ச ஶாக்தை: ஸஹ வஸன்**
**கதா³ விஷ்ணோர் ப⁴க்தை: க்வசித³பி ச ஸௌரை: ஸஹ வஸன் ।**
**கதா³ கா³ணத்⁴யக்ஷைர் க³தஸகலபே⁴தோ³(அ)த்³வயதயா**
**முநிர்ன வ்யாமோஹம் ப⁴ஜதி கு³ருதீ³க்ஷா க்ஷததமா: ॥ 14 ॥**

| | | |
|---|---|---|
| **क्वचित्**<br>**க்வசித்** | = | சில சமயங்களில், |
| **शैवैः सार्धं**<br>**ஶைவை: ஸார்த⁴ம்** | = | சிவபக்தர்களோடும், |
| **क्वचिदपि च**<br>**க்வசித³பி ச** | = | சில சமயங்களில், |
| **शाक्तैः सह**<br>**ஶாக்தை: ஸஹ** | = | சக்தி உபாஸகர்களோடும்கூட, |
| **वसन्**<br>**வஸன்** | = | வஸித்துக்கொண்டும், |
| **कदा**<br>**கதா³** | = | சில சமயங்களில், |
| **विष्णोः**<br>**விஷ்ணோ:** | = | விஷ்ணுவினுடைய, |
| **भक्तैः**<br>**ப⁴க்தை:** | = | பக்தர்களோடும், |
| **क्वचिदपि च**<br>**க்வசித³பி ச** | = | சில சமயங்களில், |
| **सौरैः सह**<br>**ஸௌரை: ஸஹ** | = | ஸூர்ய உபாஸகர்களோடும், |
| **वसन्**<br>**வஸன்** | = | வஸித்துக்கொண்டும், |
| **कदा**<br>**கதா³** | = | சில சமயங்களில், |
| **गाणाध्यक्षैः**<br>**கா³ணத்⁴யக்ஷை:** | = | கணபதி உபாஸகர்களோடும் (வஸித்துக் கொண்டும்), |
| **अद्वयतया**<br>**அத்³வயதயா** | = | இரண்டற்ற தன்மையை அடைந்து விட்டபடியால், |
| **गतसकलभेदः**<br>**க³தஸகலபே⁴த³:** | = | எல்லாவித வேற்றுமைகளு மற்றவராய் இருக்கும், |

मुनि: = ஞானியானவர்,

முநி:

गुरुदीक्षाक्षततमा: = குருநாதர் அநுக்ரஹித்த ஞான தீக்ஷையினால் அக்ஞானம் விலகினவராய்,

கு³ருதீ³க்ஷா க்ஷததமா:

व्यामोहं = ஏமாற்றத்தை,

வ்யாமோஹம்

न भजति = அடைகிறதில்லை.

ந ப⁴ஜதி

சில சமயங்களில் சிவபக்தர்களோடும், சில சமயங்களில் சக்தி உபாஸகர்களோடும் கூட வஸித்துக்கொண்டும், சில சமயங்களில் விஷ்ணுவின் பக்தர்களோடும், சில சமயங்களில் ஸூர்ய உபாஸகர்களோடும் வஸித்துக்கொண்டும், சில சமயங்களில் கணபதி உபாஸகர்களோடு வஸித்துக் கொண்டும், இரண்டற்ற தன்மையை அடைந்துவிட்டபடியால் எல்லாவித வேற்றுமைகளும் அற்றவராக இருக்கும் ஞானியானவர் குருநாதர் அனுக்ரஹித்த ஞான தீக்ஷையினால் அக்ஞானம் விலகினவராய் ஏமாற்றத்தை அடைவதில்லை.

[ஸகலவிதமான உபாஸனா மூர்த்திகளையும் வியாபித்துக் கொண்டிருக்கிற பரப்பிரஹ்மத்தின் ஸாக்ஷாத்காரம் ஏற்பட்டுவிட்ட ஞானிக்கு அம்மூர்த்திகள் யாவும் பிரஹ்மமே யானதால் அவைகளுக்குள் வித்யாஸமோ தாரதம்யமோ அவரால் கிரஹிக்கப்படமாட்டாது. அந்தந்த மூர்த்திகளை உபாஸிக்கிறவர்களும் அவருடைய ரீதியாக பிரஹ்மோ பாஸகர்களேயாவார்களாதலால் அவர் எல்லாருடனும் ஒரே மாதிரியாகக் கலந்துகொள்ளமுடியும்.] (14)

निराकारं क्वापि क्वचिदपि च साकारममलं
निजं शैवं रूपं विविधगुणभेदेन बहुधा ।
कदाश्चर्यं पश्यन्किमिदमिति हृष्यन्नपि कदा
मुनिर्न व्यामोहं भजति गुरुदीक्षाक्षततमाः ॥ १५ ॥

நிராகாரம் க்வாபி க்வசித³பி ச ஸாகாரமமலம்
நிஜம் ஶைவம் ரூபம் விவித⁴கு³ணபே⁴தே³ன ப³ஹுதா⁴ ।
கதா³ஶ்சர்யம் பஶ்யன்கிமித³மிதி ஹ்ருஷ்யன்னபி கதா³
முநிர்ன வ்யாமோஹம் ப⁴ஜதி கு³ருதீ³க்ஷாக்ஷததமா: ॥ 15 ॥

क्वापि = சில சமயம்,

க்வாபி

निराकारं = உருவமற்ற பிரஹ்ம ஸ்வரூபத்தையும்,

நிராகாரம்

| | | |
|---|---|---|
| **क्वचिदपि च**<br>**க்வசித$^{3}$பி ச** | = | சில சமயம், |
| **अमलं**<br>**அமலம்** | = | நிர்மலமான, |
| **निजं**<br>**நிஜம்** | = | தன்னுடையதான, |
| **शैवं**<br>**ஶைவம்** | = | ஸர்வமங்களமான, |
| **रूपं**<br>**ரூபம்** | = | ஸ்வரூபத்தையே, |
| **विविधगुणभेदेन**<br>**விவித$^{4}$கு$^{3}$ணபே$^{4}$தே$^{3}$ன** | = | பலவித குணங்களின் வேற்றுமையால், |
| **बहुधा**<br>**ப$^{3}$ஹுதா$^{4}$** | = | பலவிதமாய், |
| **साकारं**<br>**ஸாகாரம்** | = | ரூபமுள்ளதாகவும், |
| **कदा**<br>**கதா$^{3}$** | = | சில சமயம், |
| **इदं**<br>**இத$^{3}$ம்** | = | இது, |
| **किं**<br>**கிம்** | = | என்ன, |
| **इति**<br>**இதி** | = | என்று, |
| **आश्चर्यं**<br>**ஆஶ்சர்யம்** | = | ஆச்சர்யமாகவும், |
| **पश्यन्**<br>**பஶ்யன்** | = | பார்த்துக்கொண்டும், |
| **कदा अपि**<br>**கதா$^{3}$ அபி** | = | சில சமயம், |
| **हृष्यन्**<br>**ஹ்ருஷ்யன்** | = | ஸந்தோஷப்பட்டுக்கொண்டும் இருக்கிற, |
| **मुनिः**<br>**முநி:** | = | ஞானியானவர், |
| **गुरुदीक्षाक्षततमाः**<br>**கு$^{3}$ருதீ$^{3}$க்ஷாக்ஷததமா:** | = | குருநாதரால் அருளப்பட்ட ஞானதீக்ஷையினல் அக்ஞானம் விலகினவராய், |

**व्यामोहं** = ஏமாற்றத்தை,

**வ்யாமோஹம்**

**न भजति** = அடைகிறதில்லை.

**ந ப⁴ஜதி**

சில சமயம் உருவமற்ற ப்ரஹ்ம ஸ்வரூபத்தையும், சில சமயம் நிர்மலமான தன்னுடையதான ஸர்வ மங்களமான ஸ்வரூபத்தையே பலவித குணங்களின் வேற்றுமையால் பலவிதமாய் உருவமுள்ளதாகவும், சில சமயம் இது என்ன என்று ஆச்சர்யமாகவும் பார்த்துக்கொண்டும், சில சமயம் ஸந்தோஷப்பட்டுக்கொண்டும் இருக்கிற ஞானியானவர், தம் குருநாதரால் அருளப்பட்ட ஞான தீக்ஷையால் அக் ஞானம் விலகினவராதலால் ஏமாற்றத்தை அடைகிறதில்லை.

[நிர்குண பிரஹ்மத்தையே பரதத்துவமாயுணர்ந்த ஞானி ஸகுண மூர்த்திகளில் ஈடுபடமுடியுமா வென்றுல் அந்த நிர்குண பிரஹ்மம்தான் பலவித குணங்களாகிற உபாதிகளினுல் ஸகுணமாகத் தோன்றுகிறதென்ற அறிவு இருக்கும்போது ஸகுணத்திற்கும் நிர்குணத்திற்கும் பேதம் இருப்பதாகத் தோன்ருது. ஆனுலும் ஒருவித ரூபமுமற்ற பிரஹ்ம சைதன்யம் பலவித ரூபங்களுடன் தோன்றுவதைப் பார்த்து ஆச்சர்யமும் ஸந்தோஷமும் ஏற்படுவது ஸகஜம்.] **(15)**

**कदा द्वैतं पश्यन्नखिलमपि सत्यं शिवमयं**
**महावाक्यार्थानामवगतिसमभ्यासवशतः ।**
**गतद्वैताभासः शिव शिव शिवेत्येव विलपन्**
**मुनिर्न व्यामोहं भजति गुरुदीक्षाक्षततमाः ॥ १६ ॥**

**கதா³ த்³வைதம் பஶ்யந்நகி²லமபி ஸத்யம் ஶிவமயம்**
**மஹாவாக்யார்தா²நாமவக³திஸமப்⁴யாஸவஶத: ।**
**க³த த்³வைதாபா⁴ஸ: ஶிவ ஶிவ ஶிவேத்யேவ விலபன்**
**முநிர்ன வ்யாமோஹம் ப⁴ஜதி கு³ருதீ³க்ஷா க்ஷததமா: ॥ 16 ॥**

**कदा** = சில சமயம்,

**கதா³**

**महावाक्यार्थानां** = (தத் த்வம் அஸி முதலான உபநிஷத்துக்களிலு)

**மஹாவாக்யார்தா²னும்** ள்ள மஹா வாக்யங்களுடைய தாத்பர்யார்த்தங்களை,

**अवगतिसमभ्यासवशतः** = அறிந்து நன்கு அப்யாஸம் செய்திருப்பதனுல்,

**அவக³திஸமப்⁴யாஸவஶத:**

**अखिलं अपि** = எல்லாவற்றையும்,

**அகி²லம் அபி**

**अद्वैतं** = இரண்டற்ற,
**அத்$^3$வைதம்**

**सत्यं** = ஸத்யமான,
**ஸத்யம்**

**शिवमयं** = மங்கள ஸ்வரூபமான பிரஹ்மாகாரமாகவே,
**ஶிவமயம்**

**पश्यन्** = பார்த்துக்கொண்டு,
**பஶ்யன்**

**गतद्वैताभासः** = வேற்றுமைத் தோற்றமே விலகினவராக,
**க$^3$த த்$^3$வைதாபா$^4$ஸ:**

**शिव शिव शिव इति एव** = சிவ சிவ சிவ என்று மாத்திரம்,
**ஶிவ ஶிவ ஶிவ இதி ஏவ**

**विलपन्** = புலம்பிக்கொண்டு,
**விலபன்**

**मुनिः** = ஞானியானவர்,
**முநி:**

**गुरुदीक्षाक्षततमाः** = ஸத்குருவினிடமிருந்து கிடைத்த ஞானதீக்ஷையினுல் அக்ஞானம் விலகிவிட்டவராய்,
**கு$^3$ருதீ$^3$க்ஷா க்ஷததமா:**

**व्यामोहं** = ஏமாற்றத்தை,
**வ்யாமோஹம்**

**न भजति** = அடைகிறதில்லை.
**ந ப$^4$ஜதி**

சில சமயம் (உபநிஷத்துக்களிலுள்ள **தத் த்வம் அஸி** முதலான) மஹா வாக்யங்களுடைய தாத்பர்யார்த்தங்களை அறிந்து நன்கு அப்யாஸம் செய்திருப்பதினுல் எல்லாவற்றையும் இரண்டற்ற ஸத்யமான மங்கள ஸ்வரூபமான பிரஹ்மாகாரமாகவே பார்த்துக்கொண்டு, வேற்றுமைத் தோற்றமே அற்றவராக சிவ சிவ சிவ என்று மாத்திரம் புலம்பிக் கொண்டு, ஞானியானவர் ஸத்குருவினிடமிருந்து கிடைத்த ஞான தீக்ஷையினுல் அக்ஞானம் விலகிவிட்டவராய் ஏமாற்றத்தை அடைகிறதில்லை.

[மஹா வாக்கியங்களின் அர்த்தத்தை இடைவிடாது அனுஸந்தானம் செய்து வந்தால்தான் எல்லாம் பிரஹ்மம் என்கிற அனுபவம் ஏற்பட்டு இரண்டாவதாகத் தோன்றும் இப்பிரபஞ்சம் மறையும்.] **(16)**

**इमां मुक्तावस्थां परमशिवसंस्थां गुरुकृपा-**
**सुधापाङ्गावाप्यां सहजसुखवाप्यामनुदिनम् ।**
**मुहुर्मज्जन्मज्जन्भजति सुकृतैश्चेन्नरवरः**
**सदा त्यागी योगी कविरिति वदन्तीह कवयः ॥ १७ ॥**

**இமாம் முக்தாவஸ்தா2ம் பரமஶிவஸம்ஸ்தா2ம் கு3ருக்ருபா-**
**ஸுதா4பாங்கா3வாப்யாம் ஸஹஜஸுக2வாப்யாமனுதி3னம் ।**
**முஹுர்மஜ்ஜன்மஜ்ஜன்ப4ஜதி ஸுக்ருதைஶ்சேன்னரவரஃ**
**ஸதா3 த்யாகீ3 யோகீ3 கவிரிதி வத3ந்தீஹ கவயஃ ॥ 17 ॥**

| | | |
|---|---|---|
| **नरवरं** **நரவரம்** | = | ஒரு உத்தம மனுஷ்யர், |
| **अनुदिनं** **அனுதி3னம்** | = | பிரதிதினம், |
| **सहजसुखवाप्यां** **ஸஹஜஸுக2வாப்யாம்** | = | தனக்கு ஸ்வபாவ ஸித்தமான ஸுகமாகிற குளத்தில், |
| **मुहुः** **முஹு** | = | அடிக்கடி, |
| **मज्जन्** **மஜ்ஜன்** | = | முழுகி, |
| **मज्जन्** **மஜ்ஜன்** | = | முழுகி, |
| **सुकृतैः** **ஸுக்ருதைః** | = | புண்யங்களினுல், |
| **गुरुकृपासुधापाङ्गावाप्यां** **கு3ருக்ருபாஸுதா4பாங்கா3வாப்யாம்** | = | குருநாதருடைய கருணையாகிற அமிருதத்தோடு கூடிய கடாக்ஷத்தினுல் கிடைக்கத்தக்க, |
| **परमशिवसंस्थां** **பரமஶிவஸம்ஸ்தா2ம்** | = | பரப்பிரஹ்மத்தில் நிலைக்கும், |
| **इमां** **இமாம்** | = | இந்த, |
| **मुक्तावस्थां** **முக்தாவஸ்தா2ம்** | = | முக்தருடைய நிலையை, |
| **भजति चेत्** **ப4ஜதி சேத்** | = | அடைவாரேயானுல் அவரே, |
| **सदा** **ஸதா3** | = | எப்பொழுதும், |

| | | |
|---|---|---|
| त्यागी<br>த்யாகீ³ | = | எல்லாவற்றையும் விட்டுவிட்ட ஸன்யாஸி,<br>அவரே |
| योगी<br>யோகீ³ | = | யோகி, அவரே, |
| कविः<br>கவி: | = | எல்லாமறிந்தவர், |
| इति<br>இதி | = | என்று, |
| इह<br>இஹ | = | இங்கு, |
| कवयः<br>கவய: | = | அறிவாளிகள், |
| वदन्ति<br>வத³ந்தி | = | சொல்கிறுர்கள். |

ஒரு உத்தமமான மனுஷ்யர் பிரதிதினம் தனக்கு ஸ்வபாவஸித்தமான ஆனந்தமாகிற குளத்தில் அடிக்கடி முழுகி முழுகி புண்யங்களிஞல் குருநாதருடைய கருஊணயாகிற அமிருதத்தோடு கூடிய கடாக்ஷத்திஞல் கிடைக்கத்தக்க பரப்பிரஹ்ம த்தில் நிஜலக்கும் இந்த முக்தருடைய நிஜலயை அடைவாரேயாஞல், அவரே எப்பொழுதும் எல்லாவற்றையும் விட்டுவிட்ட ஸன்யாஸி, அவரே யோகி, அவரே எல்லா மறிந்தவர் என்று இங்கு அறிவாளிகள் சொல்கிறுர்கள்.

[குரு கிருபை இல்லாமல் அக்ஞானம் விலகாது, அக்ஞானம் விலகாமல் ஞானம் ஏற்படாது, ஞானம் ஏற்படாத விஷயத்தில் முக்திநிஜல ஏற்படாது என்பதெ ல்லாம் முன் சுலோகங்களில் கண்டிருக்கிறது. அந்த மூலகாரணமாக இருக்கும் குரு கிருபைக்கு ஸாதனம் என்னவென்றல் வேத விஹிதமான ஸத்கர்மாக்கஊ நன்கு அனுஷ்டானம் செய்து குவிந்திருக்கும் புண்யம்தான் என்று இங்கு வற்புறுத்தப் படுகிறது.] **(17)**

## ஜீவன்முக்த ஆனந்த³லஹரீ முற்றும்.